# என் சரித்திரம்

(சுருக்கம்)

டாக்டர் உ. வே. சாமிநாதையர்




சுருக்கியவர்:

கி. வா. ஜகந்நாதன்

மகாமகோபாத்தியாய

டாக்டர் உ. வே. சாமிநாதையர்

நூல் நிலையம், சென்னை-600 090

1978

## பொருளடக்கம்

# முன்னுரை

சென்ற நூறு ஆண்டுகளில் தமிழ்மொழி வளப்பம் அடைவதற்கு இரண்டு பெரும்புலவர்கள் காரணமென்று சொல்லலாம். ஒருவர் புலமையும் ஆராய்ச்சியும் பதிப்பு ஆற்றலும் நேர்மையும் உடையவர். மற்றொருவர் கவித்துவ சக்தியும் தேசபக்தியும் உணர்ச்சியும் மிக்கவர். மகாமகோபாத்தியாய தாக்ஷிணாத்திய கலாநிதி டாக்டர் உ. வே. சாமிநாதையர் முன்னவர். கவியரசர் சுப்பிரமணிய பாரதியார் மற்றொருவர்.

டாக்டர் ஐயரவர்கள் சென்ற நூற்றாண்டிலேயே தம்முடைய தமிழ்த் தொண்டைத் தொடங்கி விட்டார். பல காலமாகப் புதைந்து கிடந்த தமிழ் நூல்களை எடுத்துத் துலக்கி ஒளியூட்டித் தமிழுலகம் கண்டு கற்று இன்புறச் செய்தார். பாரதியாரோ புதிய படைப்பில் தம்முடைய இணையற்ற புதுமைப் பொலிவையும் உணர்ச்சி வேகத்தையும் காட்டினார்.

ஐயரவர்கள் பல கவிஞர்களை மீட்டும் உயிர்ப்பித்தார். இதற்காகவே பிறந்தவரைப்போல இவர் வாழ்க்கை அமைந்து விட்டது. இசைப்புலவர் மரபிலே பிறந்தாலும் இவர் இசையைப் புறக்கணித்துத் தமிழ்த்தாய்க்கே உரிய தனித் தொண்டராகிவிட்டார். இளமைக் காலத்தில் தமிழ்ப் பசியை வளர்த்துப் பிறகு தக்க தமிழாசிரியரை அடைந்து தமிழ் விருந்தை நுகர்ந்து தமிழ்ப்பெரும் புலவரானார். அந்த அளவில் நின்றிருந்தால் இன்று தமிழ் நாடு அளிக்கும் இவ்வளவு புகழை இவர் பெற்றிருக்க முடியாது. கும்பகோணம் கல்லூரியில் தமிழாசிரியராகப் புகுந்த பிறகு சேலம்

இராமசுவாமி முதலியாருடைய தூண்டுதலின்மேல் இவர் பழந்தமிழ் நூல்களைப் பதிப்பிக்கும் புதிய துறையில் புகுந் தார். அந்தத் துறையில் இவருக்கு முன் வாழ்ந்த புலவர்கள் புகுவதற்கு வாய்ப்பு இருந்தும், இவருக்கே அந்தப் பேறு கிடைத்தது. அதற்கு ஏற்ற நுண்மாண் நுழைபுலமும் பொறுமையும் நேர்மையும் இவரிடம் இருந்தன. இவர் இளமைக் காலத்தில் கற்ற கல்வியும் மகாவித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையிடம் முகந்துகொண்ட தமிழறிவும் நிலைக்களமாக உதவினவே ஒழிய, நேர்முகமான உதவியை இவர் புகுந்த புதிய துறையில் தர இயலவில்லை.

இவர் முதல் முதல் ஆராயப்புகுந்தது சீவக சிந்தாமணி. அது ஜைன சமய நூல். ஐயரவர்கள் சைவப்பற்றும் சைவச் சார்பும் சைவ நூற்பயிற்சியும் மிகுதியாக உடையவர். ஆதலின் சீவக சிந்தாமணி இவருக்குப் புதிய துறையாகவே இருந்தது. ஆயினும் இவர் அதில் புகுந்து தெளிவு கண்டு பிறருக்கும் விளங்கும்படி அந்நூலைப் பதிப்பித்து வழங்கினர். அதன் பின் இவர் மேற்கொண்ட ஆராய்ச்சிகள் ஒரே துறை யில் அமைந்தன என்று சொல்வதற்கில்லை. இரண்டாவது நூலாக இவர் மேற்கொண்டது பத்துப்பாட்டு. அது கடைச்சங்க நூல். சங்க நூலைப்பற்றிய சில கதைகளை மாத்திரம் தமிழ்ப் புலவர்கள் வழங்கி வந்த காலம் அது. எட்டுத்தொகையின் உருவமோ பத்துப்பாட்டின் இயல்போ யாரும் அறியாத காலம்; ஆதலின் பத்துப்பாட்டு ஆராய்ச்சி யும் வேறு ஒரு புது உலகமாக அமைந்தது. அதன்பின் மணிமேகலை உருவாயிற்று. அது பௌத்த சமயச்சார்புள்ள நூல். தமிழ்நாட்டில் ஜைனர்கள் சிலரேனும் வாழ்கிறார்கள்; பௌத்தர்கள் இந்தியாவிலேயே இல்லை. தமிழில் பௌத்த சமய சம்பந்தமான பெயர்கள் விநோதமாகத் தோற்றின. புத்தகம் கிடைத்தும் பொருள் தெரியாத நிலையில்தான் முதலில் இந்தப் பெரும்புலவர் இருந்தார். ஆனால் இடை விடாத உழைப்பினாலும் அறிவின் நுட்பத்தினாலும் இவர் தெளிந்தார்; பிறரையும் தெளிவித்தார்.

ஒரு முறை நம் தலைவர் ராஜாஜி அவர்கள் இப்புலவர் பெருமானுடைய தொண்டைப்பற்றி எழுதுகையில், "வியாசர் வேதங்களை உருவாக்கினதுபோல இந்தத் தமிழ் வியாசர் செய்திருக்கிறார்" என்றும், பின் ஒருமுறை, "தேனீயோடு போட்டி போட்டு வென்ற உழைப்பாளி" என்றும் கூறியிருக்கிறார். வெறும் அறிவு நுட்பம் இருந்தாலும் போதாது; எத்தனை உழைப்பு இருந்தாலும் சரி வராது. இரண்டும் இணைந்தால்தான் பெரிய காரியங்களைச் சாதிக்க முடியும் என்பதை இப்பேரறிஞர் வாழ்க்கை நன்றாகப் புலப்படுத்தும்.

***

ஐயரவர்களுடைய வாழ்க்கையை மூன்று பெரும் பிரிவாகப் பிரிக்கலாம். முதற் பிரிவு இவருடைய இளமைப் பருவம். இப் பருவத்தில் இவருக்கிருந்த தமிழ்க்காதல் வளர்ந்து வந்தது. இவருடைய தந்தையாரே இவருக்கு முதற்குரு ஆனார். தத்தாத்திரேயர் உலகத்தில் சந்தித்த மனிதரையும் கண்ட பொருள்களையும் குருவாகக் கொண்டு உபதேசம் பெற்றார் என்று பாகவதம் சொல்கிறது. இப் பெரியார் மகா வித்துவான் மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்களிடம் புகுவதற்குமுன் பல பேரைத் தமிழாசிரியராக அண்டினார். சில ஆண்டுகள் ஒருவரிடம் பாடம் கேட்டார். சில மாதங்கள் சிலரிடம் கேட்டார். சில நாட்கள் பலரிடம் கேட்டார். திருவரங்கத்தந்தாதியின் ஒரு பாடலுக்கு ஒரேநாள் ஒருபுலவரிடம் கேட்டுப் பயன் பெற்றதும் உண்டு. ஆனால் இந்தச் சிறு சிறு உணவுகள் இவருடைய தமிழ்ப் பசியைத் தணிக்கும் ஆற்றலைப் பெற்றிருக்க வில்லை. "தமிழ் எங்கே? தமிழ் ஆசிரியர் யார்?" என்று தேடித் தேடி அலைந்த வாழ்க்கையாகவே இந்தப் பருவத்தைச் சொல்லலாம்.

பிறகுதான் ஐயரவர்கள், அக்காலத்துக் கம்பர் என்ற புகழைப் பெற்ற பிள்ளையவர்களிடம் மாணாக்கராக அடைந்தார். ஒவ்வொரு பிடியாக உணவு கிடைத்தபோது உண்டு அலைந்த பெரும் பசிக்காரனுக்கு வயிறு வெடிக்க விருந்து கிடைத்தது போலத் தமிழ் அமுதம் கிடைத்தது. கவிஞரும்

பெரும் புலவருமாகிய பிள்ளையவர்கள் இவருக்குச் சிறு நூல்களில் தொடங்கிப் பெரிய நூல்களை யெல்லாம் பாடம் சொன்னார்; தமிழ்ப் பூங்காவின் எழிலை யெல்லாம் எடுத்துக் காட்டினார். ஐயரவர்கள் மனம் அவரை அடையும் வரையில் திருப்தி அடையாமல் இருந்தது; அப்புலவர் கோமானிடம் வந்த பிறகே நிறைவு பெற்றது.

***

ஐயரவர்கள் 19-2-1855 அன்று தமிழுலகு செய்த தவத்தின் பயனாகத் தோன்றினார்கள். 1871 மார்ச்சு வரையில் பலரிடம் பாடம் கேட்டு அலைந்த வாழ்க்கை இருந்தது. தம்முடைய பதினாறும் ஆண்டில் இவர் பிள்ளையவர்களை அடைந்தார். அது முதல் இவர் வாழ்க்கையின் இரண்டாவது பகுதி தொடங்குகிறது. 1876-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 31-ஆம் தேதி இவருடைய தமிழாசிரியர் இறைவன் திருவடி அடைந்தார். இந்த ஐந்து ஆண்டுகளில் இந்த மாணாக்கரும் இவருடைய ஆசிரியரும் ஒருவரிடம் ஒருவர் அன்பு வைத்துப் பழகியது போன்ற நிலையை வேறு எங்கும் காணமுடியாது. பெருங் கவிஞராகிய பிள்ளையவர்களுடைய பெரும் புலமையும் அதை விடச் சிறந்த கவித்துவமும் அதைவிடச் சிறந்த பண்பும் அறிய அறிய வியப்பை உண்டாக்குகின்றன. இந்த நாட்டில் அறிவும் கலையும் ஆசிரிய மாணாக்கர் பரம்பரையில் வளர்ந்து வந்த அழகை இந்த ஐந்து ஆண்டு நிகழ்ச்சிகளில் நன்றாக உணரலாம். இனி இத்தகைய உறவும் முறையும் வருமா என்று ஏங்கும்படி அவை அமைந்திருக்கின்றன. பிள்ளையவர்கள் காலமான பிறகு ஐயரவர்கள் திருவாவடுதுறை மடாதிபதிகளிடம் பாடங் கேட்டார். பலருக்குப் பாடமும் சொன்னார். மாணாக்கராகவும் ஆசிரியராகவும் ஒருங்கே விளங்கும் பெருமை அப்போது இவரிடம் உருவாயிற்று. அந்தத் திறமை இவருடைய இறுதிக்காலம் வரையில் வரவர வளர்ந்தே வந்தது. கும்பகோணம் கல்லூரியில் தமிழாசிரியராக 1880-ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் இவர்

சேர்ந்தார். அப்போதும் இவர் கல்லூரியில் ஆசிரியராக இருந்தாரேயன்றி வீட்டில் மாணாக்கராகவே இருந்தார்.

***

ஐயரவர்கள் வாழ்க்கையின் மூன்றாவது பகுதி கும்பகோணத்துக்கு முன்சீப்பாக வந்த சேலம் இராமசுவாமி முதலியாருடைய சந்திப்பிலே தொடங்குகிறது. அவருக்குச் சிந்தாமணியைப் பாடம் சொல்வதாக ஏற்றுக்கொண்டு, தாமே முதல் முதலில் மாணாக்கராக இருந்து அதைப் படிக்கத் தொடங்கினார். அந்தச் செயலே ஐயரவர்கள் உலகம் வியக்கும் பதிப்பாசிரியப் பெருந்தகை ஆவதற்கு வித்தாயிற்று. 'அவரிடம் என் நல்லூழ் என்னைக் கொண்டு போய் விட்டது. அவருடைய நட்பினால் என் வாழ்க்கையில் ஒரு புதுத்துறை தோன்றியது. தமிழிலக்கியத்தின் விரிவை அறிய முடிந்தது. அந்தாதி, கலம்பகம், பிள்ளைத்தமிழ், உலா, கோவை முதலிய பிரபந்தங்களிலும் புராணங்களிலும் தமிழின்பம் கண்டு மகிழ்வதோடு நில்லாமல் பழமையும் பெருமதிப்பும் உடைய தண்டமிழ் நூல்களில் பொதிந்து கிடக்கும் இன்றமிழ் இயற்கை இன்பத்தை மாந்தி நான் மகிழ்வதோடு, பிறரும் அறிந்து இன்புறச் செய்யும் பேறும் எனக்கு வாய்த்தது' என்று இந்தச் சந்திப்பைப் பற்றி இப் பேரறிஞர் எழுதுகிறார்.

சீவக சிந்தாமணி ஆராய்ச்சியிலிருந்துதான் ஐயரவர்கள் எதற்காகப் பிறந்தாரோ அந்தத் தொண்டு தொடங்கியது. பழங்காப்பியங்களையும் சங்க நூல்களையும் வேறு பழைய நூல்களையும் ஒன்றன்பின் ஒன்றாக இவர் வெளியிடத் தொடங்கினார். இருளிலே நின்று ஒளியை நோக்கிச் சென்றது போலவும், அடர்ந்த காட்டிலே வழி தெரியாமல் தத்தளித்துப் பின்பு வழி கண்டு அமைத்தது போலவும், ஆழப் புதைந்து மண்ணோடு மண்ணாக மறைந்திருந்த தங்கத்தை வெட்டி எடுத்துக் கலப்பை அகற்றி எழிலணிகளை அமைத்துத் தமிழ்த்தாய்க்கு அணிந்தது போலவும் ஆயிற்று இவருடைய தமிழ்த்தொண்டு. இவர் பிறந்த காலத்தில் சங்கநூல்கள்

இன்னவை என்று அறிவாரே இல்லை. புலமையில் பெருங் கடலாக விளங்கிய இவருடைய ஆசிரியருக்கே அவற்றைப் பற்றிய செய்தி தெளிவாகத் தெரியாது. அப்படி இருந்த தமிழுலகில் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் இருந்த தமிழக வாழ்வையும் சிந்தனைச் செல்வத்தையும் கவிதைச் சுவையையும் யாவரும் உணரும்படி செய்தார். இவர் உலகிலிருந்து மறையும் போது தம்முடைய உழைப்பின் பயனால் தமிழுலகம் இலக்கியச் செல்வ வளம் பெற்றிருப்ப தைக் கண்டு களித்தார். பழந்தமிழகத்தில் நிலவிய வீரத் தையும் காதலையும் பற்றிப் பலபல நூல்கள் குவிவதைக் கண்டார். பள்ளிக்கூடத்தில் சிறு வகுப்பில் பயிலும் இளங் குழந்தையும் பாரியைப்பற்றியும் அதிகமானைப் பற்றியும் படித்து அறிவதைக் கேட்டு இன்புற்றார். புலவர்களின் ஆராய்ச்சி நூல்களும், மேடை யேறி அவர்கள் நிகழ்த்தும் ஆராய்ச்சி உரைகளும் தம்முடைய தமிழ்த்தொண்டால் வளம்பெற்றிருப்பதை உணர்ந்தார். அரசியலிலும் சமு தாய வாழ்க்கையிலும் பழந்தமிழ் இலக்கிய அறிவு புகுந்து நலம் பயப்பதை அறிந்து மகிழ்ந்தார்.

இவர் 1880-ஆம் ஆண்டு தொடங்கிய இலக்கிய ஆராய்ச்சித் தொண்டு 1942-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் இவருடைய இறுதி மூச்சு உள்ளவரையில் தொடர்ந்து நடை பெற்று வந்தது. கும்பகோணம் கல்லூரியிலிருந்து 1903-ஆம் ஆண்டு சென்னை அரசியலார் கல்லூரிக்கு வந்தார். 1919ஆம் ஆண்டுத் தொடக்கத்தில் கல்லூரி ஆசிரியப் பதவியிலிருந்து ஓய்வு பெற்றார். ஆனாலும் தமிழாராய்ச்சியிலிருந்தும் தம்மை அண்டிய மாணாக்கர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதி லிருந்தும் இவர் ஓய்வு பெறவே இல்லை. அவை பின்னும் மிகுதியாக நடைபெறும் வாய்ப்பு உண்டாயிற்று.

இப் பெரும்பேராசிரியர் வெறும் பதிப்பாசிரியராக மட்டும் இருக்கவில்லை. பல நூல்களுக்கு உரை எழுதினார். பழுத்து முதிர்ந்த பிராயத்தில் (1937) குறுந்தொகை என்னும் சங்க நூலுக்கு விரிவான உரை எழுதி வெளியிட்டிருக்கிறார்.

அன்றியும் உரை நடையில் பலநூல்கள் எழுதினர். 1885-ஆம் ஆண்டு திருவிடைமருதூர்த் தல வரலாற்றைச் சுருக்கி 'மத்தியார்ஜுன மான்மியம்' என்ற பெயரோடு வெளியிட்ட போதே இவருடைய எழுத்தாளர் வேலையும் தொடங்கி விட்டது. ஆனல் அது பிற தொண்டுகளைப் போல விரிவாக அமையவில்லை. தம்முடைய பதிப்புக்களுக்கு இவர் எழுதிய முகவுரைகள், நூலாசிரியர் வரலாறுகள் ஆகியவற்றில் இவருடைய உரைநடையாற்றல் புலனுகிறது. ஆனல் இவருடைய எழுத்தின் அழகு இவருடைய முதுமையில்தான் நன்ருக வெளியாயிற்று. வயசானவர்கள், ''அந்தக் காலத்தில்'' என்று தொடங்கித் தம்முடைய அநுபவங்களைச் சொல்லும் இயல்பு உலகம் முழுவதும் இருக்கிறது. ஆனல் அவர்கள் சொல்வதைக் கேட்கத்தான் ஆள் கிடைப்பதில்லை. அருகில் போனுல் எங்கே பிடித்துக்கொள்வார்களோ என்று இளைஞரும் பிறரும் அஞ்சி நடுங்குவார்கள். இந்தக் கிழவரோ தம்முடைய அநுபவங்களைச் சுவை ஒழுகும்படி எழுதத் தொடங்கிய பொழுது தமிழ் நாட்டில் உள்ள இளைஞரும் முதியவரும், ஆண்களும் பெண்களும், பண்டிதரும் பாமரரும் மிக்க ஆவலோடு படித்து, இன்னும் என்ன சொல்லப் போகிருர் என்ற ஆர்வத்தோடு இருந்தார்கள்.

தமிழ்நாட்டுப் பத்திரிகைகள் கனிந்து முதிர்ந்த இந்தப் பழத்தின் அநுபவத்தேறலை இரந்து பெற்றுத் தமிழுலகத்துக்கு வழங்கின. தாம் கண்டதையும் கேட்டதையும் மிகவும் ரசமாக இவர் சொன்னுர். தாம் பழகிய பெருமக்களைப் பற்றி எழுதினர். தாம் பட்ட அல்லல்களை வருணித்தார். தம் ஆராய்ச்சியிற் கண்ட நுட்பக்கருத்துக்களை வெளியிட்டார். தம்முடைய ஆசிரியர் வரலாற்றை விரிவாக எழுதினர். இறுதியில் தம்முடைய வரலாற்றையே ''என் சரித்திரம்'' என்ற பெயரிட்டு வாரந்தோறும் எழுதி வரலானுர். 122 அத்தியாயம் வரையில் அது வெளியாயிற்று. 1899-ஆம் ஆண்டு வரையில் நிகழ்ந்தவற்றை எழுதினர். 87 ஆண்டு அறிவிலும் அநுபவத்திலும் பழுத்து நின்ற இவர் வாழ்க்கை

1942-ஆம் ஆண்டு ஏப்ரலில் இறுதி பெற்றது. இவர் எழுதிய வாழ்க்கை வரலாறே இவருடைய 44-ஆம் ஆண்டோடு நின்று விட்டது. அதற்கு மேல் 43 ஆண்டு நிகழ்ச்சிகளை இவர் வாயிலாகக் கேட்கும் வாய்ப்பை நாம் இழந்தோம்.

2

''என் சரித்திரம்'' ஆனந்தவிகடனில் 1940-ஆம் ஆண்டு ஜனவரி மாதம் தொடங்கி 1942 மே மாதம் வரையில் வெளியாயிற்று. சுய சரித்திரம் தமிழுக்குப் புதியது. அந்தத் துறையில் புகுந்து மிக விரிவாக இவர் எழுதினர். இவருடைய வரலாறு முழுவதும் இதில் கிடைக்காவிட்டாலும் கிடைத்த அளவுக்கு இது சிறந்த இலக்கியமாக இருக்கிறது. வெறும் வர்ணனைகளாகவோ, சம்பவக் குறிப்புக்களாகவோ இராமல் தம்முடைய மனத்தில் படிந்த உணர்ச்சிகளையும் நினைவுகளையும் ஓவியம்போலக் காட்டும் திறம் இச்சரித்திர நாயகருக்கு இருக்கிறது. தம்முடைய முன்னோர்களைப்பற்றி இவர் கூறும் செய்திகளில் தமிழ் நாட்டின் வாழ்க்கையில் ஒரு பகுதியைத் தெளிவாகக் காண்கிறோம். வரலாற்றுக்கிடையே மனிதப் பண்புகளைக் கூர்ந்து அறிந்து தெரிவிப்பதும், அக்காலத்துப் பழக்க வழக்கங்களைச் சொல்வதும், நிகழ்ச்சிகளோடு தொடர்புடைய செய்திகளைக் கூறி விளக்குவதும் ஆகிய முறைகளால் இந்தச் சரித்திரம் தனி ஒருவருடைய வரலாறாக மாத்திரம் இருக்கவில்லை. இதனிடையே பல புலவர்களைத் தெளிவான உருவத்தில் பார்க்கிறோம். பல நல்லவர்களைக் காண்கிறோம். மடாதிபதிகளைப் பார்க்கிறோம். ஜமீன்தார்களும் செல்வர்களும் பக்தர்களும் வருகிறார்கள். சில சிறு மனிதர்களும் கயவர்களும் தலைநீட்டுகிறார்கள்.

சிற்றூரின் அழகையும் கோயில்களின் அமைப்பையும் மடங்களின் நிகழ்ச்சிகளையும் ஐயரவர்கள் தெளிவாகக் காட்டுகிறார். சம்பிரதாயங்கள் பலவற்றைத் தெரிந்து கொள்கிறோம். கோபத்தால் விளையும் சிறு கலகங்களும்,

பொறுமையால் விளையும் போட்டிகளும், அகங்காரத்தினல் தோன்றும் அழிம்புகளும் வரலாற்றுக்குச் சுவை ஊட்டுகின் றன. நன்றியறிவு பொங்கும் நிகழ்ச்சிகளும், ஈகையின் ஈரத்தைக் காட்டும் சம்பவங்களும், அன்பின் வலிமையைப் புலப்படுத்தும் இடங்களும், மனத்தை உருக்கும் காட்சி களும் இந்தப் பெரிய வரலாற்றில் இடம் பெறுகின்றன.

தமக்கு உதவி செய்த மக்களைப்பற்றிச் சொல்லும் போதெல்லாம் இவருடைய எழுத்தில் நன்றியறிவு சுருதி போடுகிறது. தம்முடைய ஆசிரியரைப்பற்றிச் சொல்லும் போதெல்லாம் அவரிடத்தில் இவர் வைத்திருந்த இணையற்ற பக்தியின் அழுத்தம் புலப்படுகிறது. அநேகமாக நூல் முழுவதுமே இவருடைய ஈடு எடுப்பில்லாத தமிழன்பும் கடவுள் அன்பும் கைகோத்து உலவுகின்றன.

இவருடைய இளம் பருவ ஆசிரியராகிய சடகோபை யங்காருடைய சித்திரம் ஒரு தனிவகை. பிள்ளையவர்களு டைய ஓவியம் முழு உருவத்தோடு அகக் கண்ணில் நிற் கிறது. பெருந்தன்மைக்கும் தூய்மைக்கும் இருப்பிடமான சுப்பிரமணிய தேசிகரை மட்டும் நாம் மறக்க முடியுமா? தம்முடைய செல்வத்தால் தருக்குற்றுக் குட்டிச் சர்வாதி காரியாக விளங்கிய பட்டீச்சுரம் ஆறுமுகத்தா பிள்ளையைப் பற்றி ஐயரவர்கள் சொல்லாவிட்டால் இந்த வரலாறு, இத்தனை சுவை பெற்றிருக்குமோ என்று தோன்றும். ஏடு தேடிய போது இவர் பட்ட அல்லல்களை இதில் படிக்கும் போது ஒரு தனியான சுவை அவற்றில் இருக்கிறது.

எதைக் கேட்டாலும் கண்டாலும் அதைப்பற்றி நன்றாகச் சிந் திக்கவும் உணரவும் கற்றிருந்தார் ஐயரவர்கள். நூல்களைக் கற் றதோடு உலகத்தையும் நன்றாகக் கற்றார். பழகிய மனிதர்களை யும் கண்ட காட்சிகளையும் தெளிவாக உள்ளத்தில் படமாக்கி அநுபவிக்கும் திறமை இவருக்கு இருந்தது. அதனால்தான் இவ்வளவு நயமாக நமக்கு எடுத்துக்காட்ட முடிகிறது.

ஐயரவர்களுடைய தமிழ்நடை தெளிவானது. சின்னஞ் சிறிய வாக்கியங்களால் ஆனது. உணர்ச்சியை உருவாக்கிக்

காட்டும் ஆற்றலுடையது. இந்த நடையில் ஒழுங்கும் பண்பாடும் மணக்கின்றன; புலமையும் தெளிவும் ஒன்றுபட்டிருக்கின்றன; விரிவும் சுவையும் இணைந்துள்ளன.

3

ஐயரவர்கள் வாழ்க்கையில் பிந்திய பகுதியாகிய 43 ஆண்டுகளின் வரலாறு நமக்குக் கிடைக்கவில்லையே என்ற ஏக்கம் இதனைப் படிப்பவர்களுக்கு உண்டாகும். மணிமேகலையைப் பதிப்பித்து முடித்தது வரையில் இந்தச் சரித்திரம் சொல்லுகிறது. அதற்கு மேல் மிகச்சிறந்த காப்பியமாகிய பெருங்கதையை ஆராய்ந்து வெளியிட்டிருக்கிறார். ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல் என்னும் தொகைநூல்களை வெளியிட்டிருக்கிறார். குறுந்தொகைக்கு உரை எழுதிப் பதிப்பித்திருக்கிறார். பல புராணங்களையும் பிரபந்தங்களையும் பதிப்பித்திருக்கிறார். அநுபவங்களை எழுதிக் குவித்திருக்கிறார். அவற்றோடு தொடர்புடைய நிகழ்ச்சிகளை இவர் வாயிலாகக் கேட்க இயலாமற் போயிற்று. ஆயினும் இவர் புத்தகங்களுக்கு எழுதிய முகவுரைகளாலும் பிற கட்டுரைகளாலும் பிற்காலத்து நிகழ்ச்சிகள் பலவற்றைத் தெரிந்துகொள்ளலாம்.

1906-ஆம் ஆண்டு அரசியலார் இவருக்கு மகாமகோபாத்தியாயர் என்னும் பட்டத்தை வழங்கினார்கள். 1932-ஆம் ஆண்டில் சென்னைப் பல்கலைக்கழகத்தில் டாக்டர் என்னும் பட்டம் கிடைத்தது. 1935-ஆம் ஆண்டு இவருடைய சதாபிஷேகம் தமிழ் வழங்கும் இடங்களில் எல்லாம் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது.

கும்பகோணத்திலும் சென்னையிலும் அரசாங்கக் கல்லூரியில் தமிழாசிரியராக இருந்த இவர் 1924-ஆம் ஆண்டு முதல் மூன்று ஆண்டுகள் சிதம்பரம் மீனாட்சி தமிழ்க் கல்லூரியில் தலைவராக இருந்தார். இவர் கலந்துகொண்ட மகாநாடுகளும் பேசிய கூட்டங்களும் பல. சென்னையில் 1937-ஆம் ஆண்டு மார்ச்சில் பாரதீய சாகித்திய பரிஷத்

நடைபெற்றது. உலகம் புகழும் உத்தமராகிய மகாத்மா காந்தி தலைமை தாங்கினுர். அப்போது வரவேற்புத் தலை வராக இருந்து ஐயரவர்கள் ஓர் அழகிய சொற்பொழிவு ஆற்றினுர்.

இரண்டாவது உலகப் பெரும்போர் நிகழ்ந்த போது சென்னை மாநகரை விட்டு மக்கள் பாதுகாப்பான இடம் தேடிப் போகும் நிலை ஏற்பட்டது. அப்போது ஐயரவர்கள் திருக்கழுக்குன்றம் சென்று தங்கினுர். அங்கே 1942-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 28-ஆம் தேதி இறைவன் திருவடியை அடைந்தார்.

4

ஐயரவர்கள் பல பண்புகள் நிறைந்த பெரியார். இவரு டைய திறமை பல துறைகளில் வெளியாயிற்று. இவர் சிறந்த மாணுக்கர். யார் திறமையுள்ள மாணுக்கராக இருக்கும் ஆற்றலுடையவர்களோ அவர்களே சிறந்த ஆசிரி யராக விளங்க முடியும். இப்பெரியார் இளமையிலே பல ஆசிரியர்களை அண்டி அவரவர்களுக்குத் தெரிந்தவற்றைக் கற்றுக் கொண்டார். சிறிதளவு அறிவு கிடைத்தாலும் பணிவாக நடந்துகொண்டு கிடைத்ததை மதிப்புடன் ஏந்திப் பெற்றுப் பாதுகாக்கும் இயல்பு இவருக்கு அமைந்திருந்தது.

இவருடைய குரு பக்திக்கு உவமையே இல்லை. தம்முடைய ஆசிரியராகிய மீனுட்சி சுந்தரம்பிள்ளையவர்களின் பெயரைக் கூடச்சொல்லாமல் பிள்ளையவர்கள் என்றே சொல்லுவது இவர் வழக்கம். மீனுட்சி சுந்தரம் என்ற பெயருடையவர் யாரேனும் வந்தால் அவரிடம் தனியே அன்பு காட்டுவார். ஐந்து ஆண்டுகளே உடனிருந்து பழகிப் பாடங்கேட்ட இவர் அவரைப் பற்றி 800 பக்கங்களில் வரலாறு எழுதியிருக்கிறுர். அது இவருடைய குருபக்திக்குச் சிறந்த அடையாளம். தம் முடைய வெளியீடுகளால் தமிழுலகத்தில் ஒரு புதிய யுகத் தையே உண்டாக்கிய இப்பெரியார் தமிழ்ப்பெரும்புலவராக, மகாமகோபாத்தியாயராக விளங்கின காலத்தும் தம்முடைய

ஆசிரியரிடம் வைத்திருந்த பக்தியிலே சிறிதளவும் குறைந்து விடவில்லை. அந்தப் பக்தி மேலும் மேலும் வளர்ந்தே வந்தது. மிகப் பழைய சங்கநூற் பதிப்புக்களிலும் ஒப்பு மைப் பகுதிகளில் பிற பெரும்புலவர்களின் நூற்செய்யுட்களை எடுத்துக் காட்டுவது போலவே 19-ஆம் நூற்றுண்டுப் புலவராகிய பிள்ளையவர்களின் வாக்கையும் எடுத்துக் காட்டியிருக்கிறுர்.

இறுதிக்காலம் வரையில் புதிய நூல்களைப் படிக்கவும் புதிய செய்திகளைத் தெரிந்து கொள்ளவும் இவரிடம் இருந்த ஆர்வம் அளவில் அடங்காதது. வடமொழி, ஆங்கிலம் முதலிய பிறமொழியில் உள்ள நூற்பொருள்களைத் தெரிந்து கொள்வதற்கும் வேறு செய்திகளை அறிவதற்கும் அந்தத் துறைகளில் வல்லவர்களை இவர் அணுகுவார். மாணுக்கரைப் போலவே பணிவாகப் பழகி அவர்கள் கூறுவதைக் கேட்பார். பயனற்ற பலவற்றை அவர்கள் சொன்ஞலும் பொறுமை யோடு கேட்டு, அவற்றில் தமக்குப் பயன்படுவது மிகச் சிறிதளவே இருந்தாலும் அதை உள்ளத்தில் தேக்கிக் கொள் வார். ''கல உமி தின்முல் ஓர் அவல் கிடைக்காதா?'' என்று அடிக்கடி சொல்வது இவர் வழக்கம். ''என்ஒருவன் சாந்துணையும் கல்லாத வாறு'' என்ற வள்ளுவர் வாக்குக்கு இலக்கியமாக இவர் விளங்கினுர்.

***

ஐயரவர்கள் அரசியலாரால் மகாமகோபாத்தியாயர் என் னும் பட்டம் பெற்றவர். மாணுக்கர்களுக்குப் பாடம் சொல்லும் திறமை இவரிடம் அமைந்ததுபோல மிகமிகச் சிலருக்கே அமையும். திருவாவடுதுறை மடத்தில் படித்த பிள்ளைகளுக்கும் தம்பிரான்களுக்கும் பாடம் சொல்லிக் கொடுத்தார். கல்லூரிகளில் தமிழாசிரியராகப் பாடம் கற்பித்தார். மீனுட்சி கல்லூரியில் வித்துவான் தேர்வுக்குப் படிப்பவருக்குப் பாடம் சொன்ஞர். தம்முடன் பழகி உதவி புரியும் பல மாணுக்கர்களுக்கு வீட்டிலே பாடம் சொல்லித் தமிழறிவை வழங்கினுர். பல தரப்பட்ட மாண

வர்கள் இவரிடம் கற்றுர்கள். அவரவர்கள் நிலைக்கும் தகுதிக்கும் ஏற்றபடி பாடம் சொல்லும் திறமை இவர்பால் இருந்தது. இவரிடம் பாடம் கேட்ட மாணுக்கர்களில் ஜமீன்தார்கள் உண்டு; மடாதிபதிகள் உண்டு; செல்வர்கள் உண்டு; தமிழாசிரியர்கள் உண்டு; ஆராய்ச்சிக்காரர்கள், பதிப்பாசிரியர்கள், கவிஞர்கள், அரசியல் வாதிகள் எனப் பல வகையினரும் உண்டு.

தம்முடைய ஆழ்ந்த புலமையினுல் மாணுக்கர்களின் உள் ளத்தில் மதிப்பை உண்டாக்கினுர் இவர். இனிமையாகவும் தெளிவாகவும் கற்பிக்கும் தன்மையால் யாவரும் விரும்பிப் பாடம் கேட்கும்படி செய்தார். கல்லூரிகளில் வடமொழி வகுப்பில் இருப்பவர்களும் இவருடைய பாடத்தைக் கவனிப் பது வழக்கமாம். தம்முடைய அன்பினுலும் இன்சொல் லாலும் மாணுக்கர்களை இவர் தமக்கு மிகவும் வேண் டிய உறவினர் என்று எண்ணும்படி செய்தார். ஒழுக்கம், உருவம், பெருந்தன்மை ஆகியவற்றுல் அக் காலத்திலேயே ஆங்கிலப் பேராசிரியர்களுக்குச் சிறிதும் குறையாத நன் மதிப்பைப் பெற்றுர். இவருடைய வகுப்பில் இவருடைய குரலையன்றி வேறு ஒன்றும் கேளாது.

'தமிழ் வகுப்பு அநேகமாய் இங்கிலீஷ் வகுப்புப் போல் சந்தடி இல்லாமலும், பாடத்தில் செலுத்திய கவனமாயும் இருக்கும். ஸம்ஸ்கிருத ஐயா உத்ஸாகமாகப் பாடம் சொல் லும் போது காலேஜ் முழுதும் கேட்கும். தமிழ்ப் பாடமோ வகுப்பு நிறைந்திருக்குமே ஒழிய வெளிவராது. எங்கள் ஐயா சுலோகம் படித்தால் ஏதோ திவசமந்திரம்போலத்தான் இருக்கும். தமிழ் உபாத்தியாயர் செய்யுள் படிக்கும்போது, வெளியே நின்று கேட்போருக்கும் ஆனந்தமாயிருக்கும்; நீட்டிப் பாடாவிடினும் மோகனம், காம்போதி என்று அறியும்படி அழகாகச் சாயை காட்டுவார்' என்று மகாகனம் ஸ்ரீநிவாச சாஸ்திரியார் ஓரிடத்தில் ஐயரவர்களை வடமொழிப் பேராசிரியரோடு ஒப்பு நோக்கி எழுதியிருப்பது இங்கே தெரிந்து கொள்வதற்குரியது.

இவரிடம் வெறும் படிப்பை மாத்திரம் அன்றி ஒழுக்கத்தையும் மாணுக்கர்கள் கற்றுக்கொண்டார்கள். ஒவ்வொரு மாணுக்கனைப் பற்றியும் அவனுடைய ஊர், உறவினர்முதலிய விவரங்களை அறிந்து உற்சாகமூட்டுவதில் இவர் வல்லவர். தம் வீட்டில் உடனிருந்து ஆராய்ச்சி வேலையில் துணை செய்து கற்றவர்களுக்குத் தனியே நூல்களைப் பாடம் சொன்னதோடு ஆராய்ச்சி வகைகளையும் கற்றுக் கொடுத்தார். இவருடன் பழகியும் இவரிடம் பாடம் கேட்டும் சிறந்த பதிப்பாசிரியர்களாகச் சிலர் விளங்கினுர்கள்.

***

ஐயரவர்களுடைய பதிப்பைப் பற்றிச் சொல்லப் புகுந்தால் எவ்வளவு வேண்டுமானுலும் சொல்லிக் கொண்டே போகலாம். நிறைந்த புலமை, உண்மையைக் காண வேண்டும் என்ற ஆர்வம், இடைவிடாத உழைப்பு, எதனை ஆராய்ந்தாரோ அதன் மயமாய் நின்று தம்மை மறந்து ஒன்றிய இயல்பு, தமக்கு நன்ருகத் தெளிவு பிறக்கும் வரைக்கும் மனம் நிறைவு பெருமல் மேலும் மேலும் முயலும் முயற்சி, நேர்மை—இத்தனையும் இணைந்தமையால் இவர் சிறந்த பதிப்பாசிரியராக விளங்கினுர். மிகப் பழைய விரிந்த கண்டம் ஒன்றுக்கும் விரிந்துகொண்டு வரும் மற்ருெரு கண்டத்துக்கும் இணைப்புப் பாலம் போடும் வேலை இவர் ஆற்றிய வேலை. ஓலைச் சுவடிகள் மறைந்து அச்சுப் புத்தகம் வந்த காலம் இது. சுவடிகளை ஆராய்ந்து புத்தக உருவிலே கொடுக்கவேண்டியிருந்தது. சங்க நூல்கள் மறைந்து போகப் பிற்கால நூல்களே வழக்கில் இருந்த காலம். எதையும் உரைநடையில் எழுதவேண்டும் என்று வற்புறுத்தும் காலம். இந்தக் காலத்துக்குப் பயன்படும் வகையில் தெளிவும் விளக்கமும் உடைய பதிப்புகளை இவர் வழங்கினுர். ஏட்டுச் சுவடியில் இருந்ததை அப்படியே மாற்றி அச்சிட்டு விடும் எளிய வேலை அன்று இது. பல காலமாக ஏடு எழுதுவோர்கள் செய்த வழுக்கள் சுவடியில் ஏறியிருக்கும். செய்யுளின் உருவமே தெரியாது. இடையில் வழக்கு ஒழிந்த

மையால் பல பகுதிகளுக்குப் பொருளே தெரியாது. அந்தக் காட்டுக்குள் புகுந்து உண்மை தெளியவேண்டும். அதற்குத் துணைக்கருவிகளும் இல்லை. பிற்கால நூல்களைப் படித்த அறிவைக் கொண்டு சங்கச் செய்யுளுக்கு உரைகாண இயலாது. அது தனியுலகம். அப்படி இருந்தும் இந்த ஆராய்ச்சிப் பெரும்புலவருடைய கூரிய அறிவு அந்த உலகில் புகுந்து வழி கண்டது; பிறருக்கும் வழி காட்டியது.

ஐயரவர்களுக்குத் தமிழையன்றி வேறுமொழி சிறிதும் தெரியாது. ஆயினும் இவருடைய பதிப்பு அந்தக் காலத்தி லேயே ஆங்கிலேயரும் பாராட்டும் வகையில் அமைந்துள்ளது. இவருடைய பதிப்பு நூலைத் திறக்கும்போதே முதலில் முக வுரை இருக்கும். அந்த நூலைப் பற்றிய செய்திகளும், ஆசிரியரைப் பற்றிய செய்தியும், ஏட்டுச் சுவடி கிடைத்த வரலாறும் அம்முகவுரையில் காணலாம். தமக்கு உதவி செய்த அன்பர்களுக்கு நன்றி கூறும் பகுதி இறுதியில் இருக் கும். முகவுரைக்குப் பிறகு நூலாசிரியர் வரலாறு முதலியவை இருக்கும். நூலின் மூலத்தைத் திருத்தமாகப் பதிப்பித்து அடியில் குறிப்புக்களும் ஒப்புமைப் பகுதிகளும் மேற்கோ ளாக வந்த இடத்தைப்பற்றிய குறிப்புக்களும் பாடபேதங் களும் அமைத்திருப்பார். நூலின் இறுதியில் அரும்பத முதலியவற்றின் அகராதி இருக்கும். ஐயரவர்களுடைய பதிப் புக்களில் உள்ள முகவுரைகளைப் படித்தே ஒருவன் புலவனாகி விடலாம் என்று பலர் சொல்வதுண்டு. அப்படியே ஐயரவர் களின் அடிக்குறிப்புக்களையும் அரும்பத அகராதியையும் வைத்துக்கொண்டே ஆராய்ச்சி செய்து பெரிய ஆராய்ச்சியா ளராகி விடலாம்.

தமக்கு விளங்காத பகுதிகளை, 'இது விளங்கவில்லை' என்று சொல்வதிலும், பிரதிகளில் உள்ளவற்றை அப்படியே காட்டு வதிலும் இவருடைய நேர்மை புலப்படும். பதிப்பாசிரியன் நேர்மை தவறி விடுவானானால் அவன் பதிப்பித்த நூல்களை அடிப்படையாகக் கொண்டு செய்யும் ஆராய்ச்சி அத்தனையும் வீணாகிவிடும். விரிவான உரை எழுதிப் பதிப்பித்த நூல்கள்

சில ஆனாலும், மற்ற எல்லா நூல்களுக்கும் இவர் குறிப்புரை எழுதியிருக்கிறார். மாணாக்கனுக்கு எங்கே ஐயம் தோன்றுமோ அங்கே தெளிவான குறிப்பு இருக்கும்.

***

ஐயரவர்கள் எழுதிய உரைநடை நூல்களில் அநுபவத்தைக் கூறுவன பல; ஆராய்ச்சித் திறமையுடையவை பல. எல்லாவற்றிலும் எதையும் அடித்துச் சொல்லாமல் பணிவாகச் சொல்லுவார். நடையில் தெளிவும் வழுவின்மையும் பண்பு மணமும் இருக்கும். இவருடைய முகவுரைகள் ஆராய்ச்சி வன்மையைக் காட்டுபவை.

இந்தப் பெரும்புலவர் ஒரு கவிஞர் என்பது பலருக்குத் தெரியாது. இளமையிலே பாடப் பழகிக் கொண்டவர் இவர். ஒரு பெரிய கவிஞரிடம் பாடம் கேட்டவர். பல கவிஞர்களோடு பழகியவர். ஆதலின் இவரும் கவிஞராக இருந்தது வியப்பன்று. பிறருடைய கவிதைகளுக்கு உயிரூட்டி அணிசெய்து தமிழுலகுக்கு வழங்கிய இப்பெருமான் தமக்கே உரிய அடக்கத்தால் தம் கவிதைகளை விளம்பரப் படுத்தவில்லை. பக்திச் சுவை கனிந்த நூற்றுக் கணக்கான பாடல்களை இவர் பாடியிருக்கிறார். அவற்றில் தண்டபாணி விருத்தம் என்ற சிறுநூல் மாத்திரம் அச்சேறியிருக்கிறது.

இவர் பதிப்பித்தும் எழுதியும் வெளியிட்ட நூல்களின் எண்ணிக்கையைப் பார்த்தாலே நமக்கு மலைப்பு உண்டாகும். சங்கநூல்களாகிய பத்துப்பாட்டை இவரே தமிழுலகுக்கு அறிமுகப் படுத்தினர். எட்டுத்தொகை நூல்களில் ஐந்து இவருடைய கை வண்ணத்தால் விளக்க மடைந்தன. ஐம்பெருங்காவியங்களில் இப்போது வழங்கும் மூன்றையும் இவரே உயிர்ப்பித்தார். இவர் உழைப்பால் வெளிவந்த பிற காவியங்கள் 2; புராணங்கள் 13; சிறு பிரபந்தங்கள் 42; இலக்கணங்கள் 4; உரைநடை நூல்கள் 19.

கம்பராமாயணத்தையும், தேவாரத்தையும் நல்ல முறையில் பதிப்பிக்க வேண்டும் என்ற அவா இவருக்கு இருந்தது.

அந்த இரண்டும் நிறைவேறி யிருந்தால் இவருடைய விருப்பம் ஒருவாறு முற்றுப்பெற்றிருக்கும். இறைவன் திருவுள்ளம் வேறு விதமாக இருந்தது.

ஐயரவர்கள் மேடைப் பேச்சும் வீட்டுப் பேச்சும் கிட்டத்தட்ட ஒரு மாதிரியே இருக்கும். இரண்டிலும் நகைச் சுவை மிகுதியாக இருக்கும். எந்த நுட்பமான கருத்தையும் எளிதிலே விளக்குவார். பேசும்போது கொச்சையான சொற்களைக் கூடியவரையில் குறைத்தே பேசுவார்.

இவருடன் உரையாடிக் கொண்டிருந்தால் பொழுது போவதே தெரியாது. யார் யாருக்கு எது விருப்பமோ அந்தத் துறையில் சுவையான கருத்துக்களை எடுத்துக் கூறுவார். சமையற்காரர் ஒருவருடன் பேசினுல் பலவகை உணவுகளைப் பற்றிப் பேசுவார். இடையிலே இலக்கியத்தில் வரும் உணவைப் பற்றியும் சொல்வார். சிற்பி ஒருவனுடன் பேசினுல் சிற்பத்தைப் பற்றியே பேசித் தம் பேச்சிலே சுவையை எழுப்புவார். தம்முடைய பழைய அநுபவங்களை இவர் எடுத்துச் சொல்லும்போது கேட்பவர்க்கு அந்தக் காலத்தில் அந்த இடத்தில் தாமும் இருப்பதாக ஓர் உணர்ச்சி உண்டாகும்.

மேடைப் பேச்சுகளில் அலுப்புத் தட்டாமல் நெடுநேரம் பேசுவார். ஊர்களைப் பற்றியும் பெயர்ப் பொருத்தங்களைப் பற்றியும் சமத்காரமாகப் பேசிக் கேட்பவர்கள் கவனத்தை இழுத்துக் கொள்வார். இக் காலத்தவர்கள் காணும் பேச்சுக் கலையின்படி அமைந்த பேச்சாக அது இராது. ஆனுல் இவர் பேசும்போது கேட்பவர்கள் மிகவும் ஈடுபட்டுக் கேட்பார்கள். பேச்சைக் கேட்டபிறகு எத்தனையோ புதிய பொருள்களைத் தெரிந்து கொண்டோம் என்ற மன நிறைவு கேட்டவர்களுக்கு உண்டாகும்.

***

பண்பு நிறைந்த நல்ல மனிதர் என்ற வகையில் ஐயரவர்களை எண்ணும்போது, அதை எப்படி எழுத்தில் வடித்துக் காட்டுவது என்ற மயக்கம் உண்டாகிறது. இவருடைய

அடக்கத்தைச் சொல்வதா? இங்கிதமான பேச்சைச் சொல்வதா? சாதி சமய வேறுபாடின்றி, இளையோர் முதியோர் என்ற பாகுபாடின்றி, யாவரிடமும் மதிப்பு வைத்துப் பழகும் பெருந்தன்மையைச் சொல்வதா? ஏழைகளிடம் இருந்த பரிவைப் பாராட்டுவதா?

''பணியுமாம் என்றும் பெருமை'' என்பதற்கு இலக்கியமான உருவம் இவர். நன்றியறிவே இவருடைய உடம்பில் குருதியாக ஓடியது. கடவுட் பக்தியிலே பிறந்து அதிலே வளர்ந்து அதிலே கரைந்தவர் இவர். சிவபக்தியில் சிறந்தவர். எந்த ஊருக்குப் போனாலும் அங்குள்ள ஆலயத்தைத் தரிசிக்காமல் இருப்பதில்லை. ஒவ்வொரு நாளும் தேவார பாராயணம் செய்யாமல் வேலைதொடங்குவதில்லை. இரவானாலும் பகலானாலும் படுத்திருந்தாலும் நடந்தாலும் வேலை இல்லாத நேரங்களில் எல்லாம் சிவ நாமத்தை ஜபித்துக் கொண்டே இருப்பார். இவருடைய நூல்களில் முகவுரையின் தொடக்கத்தில் ஏதேனும் ஒரு தேவாரப் பாசுரமோ திருவாசகப் பாடலோ இராமல் இராது. சைனநூலாகிய சீவக சிந்தாமணி ஆனாலும் சரி, பௌத்தநூலாகிய மணிமேகலையானாலும் சரி, முகவுரையின் தலைப்பில் இத்தகைய பாடலைக் காணலாம். புத்தகங்களின் முகப்புப் பக்கத்தில் பிள்ளையார் சுழியும் சிவமயமும் நிச்சயம் இருக்கும்.

திருநீறு விளங்கும் நெற்றியும் திருமேனியும் ருத்திராட்ச மாலை பூண்ட மார்பும் பழுத்த தோற்றமும் உயரமான உருவமும் உடைய இவரைப் பார்த்தால், ''இவரும் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவரோ!'' என்று தோன்றும். தேவாரத்தைத் தாம் ஓதும் போதும் பிறர் ஓதக் கேட்கும்போதும் மனம் கசிந்து கண்ணீர் ததும்ப நிற்கும் காட்சியைக் கண்டவர்கள் இவருடைய சிவபக்தித் திறத்தை உணர்ந்திருப்பார்கள்.

## 5

இத்தகைய மகானுடைய திருவடியின்கீழ் இருந்து தமிழ் பயிலும் பேறு எனக்குக் கிடைத்தது. பதினைந்து ஆண்டுகள்

இந்தத் தமிழ்ப் பெருங்கடலின் அருகில் இருக்கும் புண்ணியம் பெற்றேன்; இந்தக் குணமலையின் பெருமையை ஓரளவு உணரும் வாய்ப்பு உண்டாயிற்று.

ஆனந்தவிகடனில் வெளியான ''என் சரித்திரம்'' 122 அத்தியாயங்களோடு நின்றதென்று முன்பு குறித்தேன். அதைப் புத்தக உருவில் ஐயரவர்களின் குமாரர் **ஸ்ரீ கலியாண சுந்தரையர்** அவர்கள் 1950 ஏப்ரலில் வெளியிட்டார். மேலுள்ள வரலாற்றை எழுதி நிறைவேற்ற வேண்டும் என்ற ஆர்வம் அவருக்கு இருந்தது. அது நிறைவேறவில்லை.

நல்ல நூல்களின் சுருக்கங்களை வெளியிட வேண்டும் என்ற கருத்தை உடைய சாகித்திய அகாதமியார் 'என் சரித்திர'த்தைச் சுருக்க எண்ணியபோது அந்தப் பொறுப்பை என்பால் அடைத்தனர். வேறு மொழிகளில் இதனை மொழி பெயர்த்து வெளியிட வேண்டும் என்பது அகாதமியாரின் விருப்பம். அவர்கள் பணித்த படியே இந்தச் சுருக்கத்தை இப்போது ஒழுங்கு செய்தேன்.

மூல நூலில் உள்ள பல வருணனைப் பகுதிகளையும், செய்யுட்களையும், விளக்கங்களையும் குறைத்திருக்கிறேன். இடையிடையே வரும் பலருடைய வரலாறுகளை எடுத்திருக்கிறேன். 122 அத்தியாயங்களைச் சுருக்கி 58 அத்தியாயங்கள் ஆக்கினேன். அத்தியாயத் தலைப்புகளிற் பல நான் புதியனவாக அமைத்தவை.

இந்தப் பணியை எனக்குத் தந்த சாகித்திய அகாதமியாருக்கு என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்தப் புத்தகமும் தியாகராச விலாச வெளியீடாகவே வருகிறது. ஐயரவர்கள் வீட்டுக்குத் தியாகராச விலாசம் என்று பெயர். ஐயரவர்களுடைய பேரராகிய ஸ்ரீ க. சுப்பிரமணியன், பி.ஏ. அவர்கள் இந்தச் சுருக்கத்தைத் தம் பொறுப்பிலே வெளியிட ஏற்றுக்கொண்டார். அவருக்கும் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

''காந்தமலை'', கல்யாண நகர் **கி. வா. ஜகந்நாதன்**
சென்னை- 28 21—1—58

## இரண்டாம் பதிப்பின் முன்னுரை

ஐயரவர்கள் எழுதிய 'என் சரித்திரம்' புத்தக உருவில் 1950-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் வெளிவந்தது. அந்த வரலாறு இந்திய மக்கள் அனைவருமே அறிவதற்குரியது என்று சாகித்திய அகாதமியார் எண்ணினர். தமிழ் வளர்ந்த விதத்தையும் தமிழ் நாட்டிலிருந்த புலவர்கள், புரவலர்கள் முதலிய பலவேறு மக்களின் இயல்புகளையும் அந்த நூல் சொல்வதால் அது தமிழ் நாட்டின் வரலாற்றில் ஒரு பகுதியாகவே கொள்ளுவதற்குரியது. ஆகவே இந்திய மொழிகள் எல்லாவற்றிலும் மொழி பெயர்ப்பதற்குரியது அது என்று சாகித்திய அகாதமியார் எண்ணினர். அது மிகவிரிந்ததாக இருந்ததனாலும், இடையிடையே வரும் பாடல்களை மொழி பெயர்ப்பது அருமையாதலாலும், மொழி பெயர்ப்புக்கு ஏற்ற வகையில் ஓரளவு அதைச் சுருக்க வேண்டும் என்று எண்ணினர். அவர்களுடைய விருப்பத்தின்படியே 'என் சரித்திரச்' சுருக்கம் 1958-ஆம் ஆண்டு ஜனவரியில் வெளியாயிற்று. சாகித்திய அகாதமியின் ஆதரவில் தியாகராஜ விலாச வெளியீடாகவே வந்தது.

புத்தகம் முழுவதும் செலவாகி அன்பர்கள் மீட்டும் அதைப்பதிப்பிக்க வேண்டும் என்று விரும்பியதால் இப்போது அதன் இரண்டாம் பதிப்பு ஐயரவர்கள் நூல் நிலைய வெளியீடாக வருகிறது. இருபது ஆண்டுகளுக்குப் பின் இந்தப் பதிப்பு வெளியாகிறதிலிருந்து தமிழ் மக்கள் எந்த அளவில் இத்தகைய நூல்களுக்கு ஆதரவு தருகிறார்கள் என்பது புலனாகிறது. மிகவும் குறைந்த விலையில் தான் இந்தப்

புத்தகம் வெளியாயிற்று. ஆனாலும் இதை மிகுதியாக வாங்குவார் இல்லை.

இந்தச் சுருக்கம் வெளியான பிறகு இந்தி, தெலுங்கு, கன்னடம், மலையாளம் ஆகிய மொழிகளில் இதன் மொழிபெயர்ப்பு வெளியாகியிருக்கிறது. இதன் ஆங்கில மொழிபெயர்ப்பை, திரு. ஸ்ரீதரம் குருசாமி என்னும் அன்பர் எழுதி நிறைவேற்றியுள்ளார்; அது இன்னும் புத்தக வடிவில் வெளியாகவில்லை. அதை வெளியிடற்கு ஏற்ற வகையில் பொருளுதவி கிடைத்தால் இந்த நூல்நிலைய வெளியீடாகவே வெளியிடலாம் என்ற எண்ணம் நூல் நிலையத்தினருக்கு இருக்கிறது.

ஐயரவர்களின் வாழ்க்கையில் முதல் 44-ஆண்டுகளின் நிகழ்ச்சிகளே அவர்கள் எழுதிய 'என் சரித்திரத்'தில் இருக்கின்றன. அதன்பின் 43 ஆண்டுகளின் வரலாறு அவர்களால் எழுதப்பெறும் வாய்ப்பு நமக்குக் கிடைக்கவில்லை. ஐயரவர்களின் புதல்வர் அமரர் **கலியாண சுந்தரையரவர்கள்** அந்தப் பிற்பகுதியை எழுத எண்ணிக் குறிப்புக்களைச் சேகரித்தார். அவரால் அதை நிறைவேற்ற இயலாமற் போயிற்று. அந்தப் பிற்பகுதியை எழுதும் தொண்டை எளியேன் மேற்கொண்டிருக்கிறேன். ஐயரவர்களுடன் பழகியவர்கள், அவர்களிடம் பாடம் கேட்டவர்கள், அவர்களை அறிந்தவர்கள் வரவரக்குறைந்து கொண்டு வருகிறார்கள் என்றாலும் இப்போது உள்ளவர்கள் தங்கள் தங்களுக்குத் தெரிந்தவற்றை எழுதி உதவுவார்களானால், ஐயரவர்கள் வரலாற்றின் பிற்பகுதியை நிறைவேற்றுவதற்குப் பேருபகாரம் செய்தவர்களாவார்கள். அவர்கள் எழுதிய கடிதங்கள், அவர்களுடைய நிழற்படங்கள், அவர்களைப் பற்றிக் கேள்வியுற்ற செய்திகள், அவர்கள் உரையாடிய போது சொன்ன சுவையான செய்திகள் முதலியவற்றை அன்பர்கள் அனுப்பலாம். அவற்றைத் தக்க வகையில்

பயன்படுத்திக் கொள்ள முயல்வேன். இறைவன் திருவருளால் இந்த முயற்சி நல்ல முறையில் நிறைவேற வேண்டும்.

ஐயரவர்கள் பெயரால் அமைந்த இந்த நூல் நிலையத்தில் ஐயரவர்கள் சேமித்து வைத்திருந்த ஏடுகள், காகிதப் பிரதிகள், குறிப்புக்கள், அவர்கள் பயன்படுத்திய புத்தகங்கள் முதலியவை ஒழுங்குபடுத்திப் பாதுகாக்கப் பெற்று வருகின்றன. அவர்கள் வெளியிட்ட நூல்களின் மறுபதிப்புக்களை வெளியிடுவதோடு வெளிவராத பழைய நூல்களையும் வெளியிடும் பணியையும் இந் நிலையம் மேற்கொண்டிருக்கிறது. அந்த வகையில் இதுவரையில் 56 நூல்கள் வெளியாகியிருக்கின்றன.

எத்தனையோ வரலாற்றுத் தொடர்புடைய நூல்களும் தல புராணங்களும், பிரபந்தங்களும், சமய நூல்களும், தனிப்பாடல்களும், இந்த நூல் நிலையத்தில் உள்ளன. தக்கபடி பொருளுதவி கிடைக்குமானால் அவற்றை ஆராய்ந்து வெளியிடலாம். திருக்கோயில்களின் ஆட்சிக் குழுவில் இருப்பவர்கள் மனம் வைத்தால் தல சம்பந்தமான பல புராணங்களையும் பிரபந்தங்களையும் தமிழ் மக்கள் படிக்கும் வாய்ப்பு உண்டாகும். செல்வர்களும், அரசினரும் பொருள் வழங்கினால் பலபல அரிய நூல்களை வெளியிடலாம். தமிழ் நாடு வளம் பெறவேண்டுமானால் தமிழும் வளம் பெறவேண்டும். புதிய முறையில் புதிய வளம் பெருகினால் மட்டும் போதாது. பன்னூறு ஆண்டுகளாக வளர்ந்து வந்த பழைய வளத்தை, பண்டை நூல்களைப் பாதுகாப்பது மிகவும் இன்றியமையாதது.

இந்த நூல் நிலையத்தின் அத்யக்ஷராகத் திருமதி ருக்மிணி தேவியார் இருக்கிறார்கள். அவருடைய முயற்சியினால் இந்த அளவில் இது நிலவி வருகிறது. இதன்

ஆட்சிக் குழுவின் தலைவர் **சம்ஸ்கிருதி சேவாரத்தின திரு. டி. வி. விசுவநாதையரவர்கள்.** அவருடைய யோசனை களும் ஆதரவும் நூல் நிலையம் மேலும் மேலும் வளர்ச்சி பெற உதவுகின்றன.

இதோ தங்கச் சுரங்கம். இதை அகழ்ந்து தங்கத்தை எடுத்து மாசு நீக்கி நாணயத்தோடு அணிகலமாக்கும் பொறுப்புத் தமிழ் மக்களைச் சார்ந்தது. இறைவன் திருவருளால் தமிழ்த் தாய்க்கு இன்னும் பல அணிகலன் களை வழங்கும் வாய்ப்பு இந்நூல் நிலையத்துக்குக்கிடைக்க வேண்டும்.

சென்னை-90 **கி. வா. ஜகந்நாதன்**

*6-2-1978* ஆராய்ச்சித்துறை இயக்குநர்

டாக்டர் ஐயரவர்கள் நூல் நிலையம்

# என் சரித்திரம்

## 1. எங்கள் ஊர்

சற்றேறக்குறைய இருநூறு வருஷங்களுக்கு முன்பு தஞ்சாவூர் ஸம்ஸ்தானத்தை ஆண்டு வந்த அரசர் ஒருவர் தம்முடைய பரிவாரங்களுடன் நாடு முழுவதையும் சுற்றிப் பார்க்கும் பொருட்டு ஒரு முறை தஞ்சாவூரிலிருந்து புறப் பட்டார். அங்கங்கே உள்ள இயற்கைக் காட்சிகளையெல் லாம் கண்டு களித்தும், தலங்களைத் தரிசித்துக் கொண்டும் சென்றார். இடையில், தஞ்சைக்குக் கிழக்கே பதினைந்து மைல் தூரத்தில் உள்ள பாபநாசத்திற்கு அருகில் ஓரிடத்தில் தங்கினார். வழக்கம் போல் அங்கே போஜனம் முடித்துக் கொண்ட பிறகு தாம்பூலம் போட்டுக் கொண்டு சிறிது நேரம் சிரம பரிகாரம் செய்திருந்தார்; தம்முடன் வந்தவர்களோடு பேசிக்கொண்டு பொழுது போக்குகையில் பேச்சுக்கிடையே அன்று ஏகாதசி யென்று தெரிய வந்தது. அரசர் ஏகாதசியன்று ஒரு வேளை மாத்திரம் உணவு கொள்ளும் விரதம் உடையவர்; விரத தினத்தன்று தாம் பூலம் தரித்துக் கொள்ளும் வழக்கமும் இல்லை. அப்படி இருக்க, அவர் ஏகாதசியென்று தெரியாமல் அன்று தாம் பூலம் தரித்துக் கொண்டார். எதிர்பாராதபடி விரதத்திற் குப் பங்கம் நேர்ந்ததைப் பற்றி வருந்திய அரசர் அதற்கு

என்ன பரிகாரம் செய்யலாமென்று சில பெரியோர்களைக் கேட்டார். அப்பெரியோர்கள், ''ஓர் அக்கிரகாரப் பிரதிஷ்டை செய்து வீடுகள் கட்டி வேதவித்துக்களாகிய அந்தணர்களுக்கு அவ்வீடுகளோடு பூமியையும் தானம் செய்தால் இந்தத் தோஷம் நீங்கும்'' என்றார்கள்.

''இதுதானா பிரமாதம்? அப்படியே செய்து விடுவோம்; இதே இடத்தில் பிரதிஷ்டை செய்வோம்'' என்று அரசர் மனமுவந்து கூறி, உடனே அங்கே ஓர் அக்கிரகாரத்தை அமைக்க ஏற்பாடு செய்தார். அதில் 48 வீடுகளைக் கட்டி, வேதாத்தியயனம் செய்த 48 பிராமணர்களை அருகிலும் தூரத்திலும் உள்ள ஊர்களிலிருந்து வருவித்து, வீடுகளையும் நிலத்தையும் தானம் செய்தார். அந்த உத்தமமான தானப்பொருளாக அமைந்தமையால் அவ்வூர் உத்தமதானபுரம்* என்னும் பெயரால் வழங்கலாயிற்று. அந்தக் குடும்பத்தினர் அனைவரும் உத்தமதானபுரத்தில் வைதிக ஒழுக்கம் பிறழாமல் வாழ்ந்து வந்தார்கள். இந்த உத்தமதானபுரம் இன்னும் தன் பெயரை இழந்து விடாமல் தஞ்சாவூர் ஜில்லாவில் பாபநாசம் தாலூகாவில் ஒரு கிராமமாக இருந்து வருகின்றது.

இதுதான் எங்கள் ஊர். இப்போது உள்ள உத்தமதானபுரத்துக்கும், 'எங்கள் ஊர்' என்று பெருமையோடு நான் எண்ணும் உத்தமதானபுரத்துக்கும் எவ்வளவோ வேறுபாடு உண்டு. என் இளமைக் காலத்தில் இருந்த எங்கள் ஊர்தான் என் மனத்தில் இடங்கொண்டிருக்கிறது. இந்தக் காலத்தில் உள்ள பல சௌகரியமான அமைப்புக்கள் அந்தக் காலத்தில் இல்லை; ரோடுகள் இல்லை; கடைகள் இல்லை; உத்தியோகஸ்தர்கள் இல்லை; ரெயிலின் சப்தம் இல்லை. ஆனாலும், அழகு இருந்தது; அமைதி இருந்தது. ஜனங்களிடத்தில் திருப்தி இருந்தது; பக்தி இருந்தது.

---

* பாபநாசம் ரெயில்வே ஸ்டேஷனுக்குக் கிழக்கே முக்கால் மைல் தூரத்தில் உள்ளது.

அவர்கள் முகத்தில் மகிழ்ச்சி நிலவியது; வீடுகளில் லக்ஷ்மீ கரம் விளங்கியது.

உத்தமதானபுரத்தில் அண்ணு ஜோஸ்யரென்ற ஓர் அந்தணர் இருந்தார். அவர் ஜோஸ்யத்தினுலும் வைதிக வாழ்க்கையினுலும் வேண்டியவற்றைப் பெற்றுக் கவலை யின்றி ஜீவனம் செய்து வந்தார். நல்ல கட்டுள்ள தேகம் வாய்ந்த அவர் ஒரு நாள் எங்கோ ஒரு கிராமத்தில் சாப் பிட்டு விட்டு மார்பு நிறையச் சந்தனமும், வாய் நிறையத் தாம்பூலமும், குடுமியிற் பூவும் மணக்க உல்லாசமாக ஊருக்கு வந்து கொண்டிருந்தார். நடுவழியே பாபநாசத் தில் தஞ்சாவூர்க் கலெக்டர் 'முகாம்' செய்திருந்தார். அவ் வழியே வரும்போது கலெக்டரும் சிரஸ்தேதாரும் வெளியே நின்று கொண்டிருந்தனர். கலெக்டர் வெள்ளைக்காரர்; சிரஸ்தேதார் இந்தியர்.

கலெக்டர் துரையினுடைய பார்வை அண்ணு ஜோஸ்யர் மேல் விழுந்தது. அவருடைய அங்க அமைப்பையும் ரிஷபம் போன்ற நடையையும் முகத்தில் இருந்த ஒளியையும் கண்டபோது கலெக்டர் துரைக்கு மிக்க ஆச்சரியம் உண்டாயிற்று. திடீரென்று அவரை அழைக்கச் செய்து சிரஸ்தேதார் மூலமாக அவரைச் சில விஷயங்கள் கேட்கலானுர்.

கலெக்டர்:—உமக்குப் படிக்கத் தெரியுமா?
ஜோஸ்யர்:—தெரியும்.
கலெக்டர்:—கணக்குப் பார்க்கத் தெரியுமா?
ஜோஸ்யர்:—அதுவும் தெரியும். நான் ஜோஸ்யத்தில் நல்ல பழக்கம் உடையவன்; அதனுல் கணக்கு நன்ருகப் போடுவேன்.

கலெக்டர்:—கிராமக் கணக்கு வேலை பார்ப்பீரா?
ஜோஸ்யர்:—கொடுத்தால் நன்ருகப் பார்ப்பேன்.

அவர் கம்பீரமாக விடையளிப்பதைக் கேட்ட துரைக் குச் சந்தோஷம் உண்டாகி விட்டது. ஜோஸ்யர் நன்ருக

அதிகாரம் செய்யக்கூடியவரென்றும் ஜனங்கள் அவருக்கு அடங்குவார்களென்றும் அவர் நம்பினர். உடனே ஒரு கர்ணம் வேலையைக் கொடுத்து விட்டார். அக்காலத்தில் வேலைக்குப் போட்டி இராது. ஆளைப்பார்த்து, வாட்ட சாட்டமாக இருந்தால் உத்தியோகங்களைக் கொடுத்து விடுவது வழக்கம்.

கலெக்டருடைய கண்ணைக் கவர்ந்த தேகக் கட்டு அண்ணு ஜோஸ்யர் ஒருவருக்குத்தான் அமைந்திருந்த தென்று எண்ணவேண்டாம். ஒவ்வொருவரும் அவரைப் போலவே தேக வன்மை பொருந்தியவராக இருந்தனர். இரண்டு வேளைகளே உண்டாலும் அவர்கள் உண்ணும் உணவின் ஒவ்வோர் அணுவும் உடம்புக்குப் பலத்தைத் தந்தது.

உத்தமதானபுரம் ஒரு சிறிய கிராமந்தான்; ஆனாலும் அந்த ஊர் எங்கள் ஊர்; என் இளமைக் காலத்தின் இனிய நினைவுகளையும், விரிந்த உலகத்தை அறியாத என் இளங் கண்களுக்குக் கவர்ச்சியை அளித்த தோற்றத்தையும் கொண்ட என்னுடைய ஊர். வேறு எந்த ஊரும் நகரமும் என் உள்ளத்தில் அதன் ஸ்தானத்தைப் பெறுவதென்பது சாத்தியமா?

## 2. என் முன்னோர்கள்

''பதினாயிரம் பிராமணர்களுக்கு அன்னதானம் செய்ய எண்ணியிருக்கிறேன்; அதற்கு மகாராஜா உதவி செய்ய வேண்டும்'' என்று ஒருவர் ஓர் அரசரை வேண்டிக் கொண்டாராம். அந்த அரசர் அதற்காக நிறையப் பொருளுதவி செய்தார். அந்தத் தொகையைப் பெற்று அவர் தம் வீட்டில் இரண்டே அந்தணர்களை அழைத்து அவர்கள் திருப்தி அடையும்படி போஜனம் செய்வித்து மிகுதியான தட்சிணையும் கொடுத்து அனுப்பினர்.

அயல் வீட்டிலுள்ள ஒருவர் அவருடைய விஷயங்களை நன்கு அறிந்து கொண்டவ ராதலின் அவரை, ''பதினாயிரம் பேருக்கு அன்னம் இடுவதாக ராஜாவை ஏமாற்றி விசேஷமான பொருளை வாங்கி வந்தீரே; இரண்டு பேருக்குத்தானே சாப்பாடு போட்டீர்?'' என்று கேட்ட போது அவர், ''நான் பதினாயிரத்துக்கு மேல் ஆயிரம் சேர்த்துப் பதினோராயிரம் பேர்களுக்குப் போஜனம் செய் வித்தேனே!'' என்றார்.

கேள்வி கேட்டவர், ''இது பெரும் புரட்டாக அல்லவா இருக்கிறது? இரண்டு பேருக்குப் போட்டு விட்டுப் பதினோராயிரம் பேருக்குப் போட்டதாகவும் சொல்லுகிறீரே!'' என்று மீண்டும் கேட்டார். அந்தச் சாமர்த்தியசாலி, ''நான் போஜனம் செய்வித்தவர்களில் ஒருவர் எண்ணாயிரத்தார்; மற்றொருவர் மூவாயிரத்தார். இருவரும் சேர்ந்து பதினோராயிரம் பேர் ஆகவில்லையா?'' என்று சமத்காரமாகப் பதிலளித்தார். குறை கூறியவருக்கு விஷயம் விளங்கியது.

அஷ்ட ஸகஸ்ரப் பிராமணர் ஒருவரும், சிதம்பர தீக்ஷிதர் ஒருவரும் அவர் வீட்டில் உணவருந்தினார் களென்றும், எண்ணாயிரவரும் தில்லை மூவாயிரவரும் சேர்ந்து உண்டதையே அவர் சாதுரியமாகப் பதினோராயிர வரென்று கூறினாரென்றும் உணர்ந்து கொண்டாராம்.

இந்தக் கதை உண்மையோ பொய்யோ எப்படி இருந் தாலும், இத்தகைய தந்திரத்தை விநோதார்த்தமாக நானும் உபயோகித்ததுண்டு. ''நான் ஒருவனாக இருந்தாலும் எண்ணாயிரம்'' என்று சிலேடை தோன்றச் சில இடங் களில் சொல்லியிருக்கிறேன். அதைக் கேட்ட ஒவ்வொரு வரும் தத்தமக்குத் தோன்றியபடி அர்த்தம் செய்து கொள் வார்கள். ''பிராமணர்களுக்குள் அஷ்ட ஸகஸ்ரமென்பது ஒரு பிரிவு; அதற்கு எண்ணாயிரம் என்று அர்த்தம். அந்தப் பிரிவைச் சேர்ந்தவன் நான்'' என்று சொன்ன

பிறகே யாவரும் என்னுடைய நிலைமையைத் தெளிவாக உணர்வார்கள்.

என் கொள்பாட்டனார் பெயர் வேங்கட நாராயணையர் என்பது. அவர் மெலிந்த உடலுடையவர். அதனால் ''சோனன்'' என்று அவருக்கு ஒரு பட்டம் கிடைத்தது. சோனி யென்றும் சோனனென்றும் மெலிந்தவனை அழைப்பது இந்நாட்டு வழக்கமென்பது பலருக்கும் தெரிந்த செய்திதானே? அவர் இருந்த வீட்டைச் ''சோனன் அகம்'' என்று பிற்காலத்தாரும் வழங்கி வருவதுண்டு. அந்த வீடுதான் எங்கள் வீடு.

வீரர்கள் இறந்தால் கல் நாட்டி வழிபடுவது பழைய வழக்கம். அந்தக் கல்லை வீரக்கல் என்று சொல்வார்கள். இப்படியே பதிவிரதைகள் இறந்த இடத்தையோ அவர்கள் ஞாபகத்தையோ குறிக்கும் கல்லை மாஸதிக்கல் என்று கூறுவர். இறந்த பிறகு அவர்களை இந்தக் கல்லெல்லாம் ஞாபகப்படுத்துகின்றன. எங்கள் கொள்பாட்டனார் உயிரோடு வாழ்ந்த காலத்திலேயே அவருடைய ஞாபகத்திற்கு அடையாளமாக ஒரு கல் ஏற்பட்டுவிட்டது.

எங்கள் ஊர்க் குளத்துப் படித்துறையில் ''சோனப் பாட்டா கல்'' என்ற ஒரு கல் இருக்கிறது. குளத்தில் நீராடிவிட்டு வழு வழுப்பாயிருந்த அந்தக் கல்லிலேயே வேங்கட நாராயண ஐயர் வேஷ்டி துவைப்பாராம். அதனால் அந்தக் கல்லுக்கு அப்பெயர் நிலைத்துவிட்டது. எவ்வளவோ பேர்கள் எவ்வளவோ கற்களில் துவைத்திருப்பார்கள். ஆனால் எல்லாக் கல்லுக்கும் பெருமை உண்டாகிறதா? இன்றும் அந்தக் குளத்தங்கரைக் கல்லைக் காணும்பொழுது,'சாஸனம் இல்லாத இந்தவெறும் கல் நம் கொள்பாட்டனாரின் பெயரை நினைப்பூட்டுகின்றது; இதில் அவருடைய கை பட்டிருக்கிறது' என்ற எண்ணத்தினால் என்னுடைய கைகள் தாமே குவியும்.

என் பாட்டஞரை எனக்கு நன்ருக ஞாபகம் இருக்கிறது. வேங்கடாசலேயர் என்பது அவர் பெயர். எனக்கு அரிச்சுவடி சொல்லிக் கொடுத்தவர் அவரே. எவ்வளவோ தெய்வத் தோத்திரங்களே வாய்ப் பாடமாகச் சொல்லிக் கொடுத்திருக்கிருர். அவை இப்போது மறந்துபோய் விட்டன. ஆனல் அவர் கொடுத்த பலமான அடிகளே மாத்திரம் நான் மறக்கவில்லே.

அவர் உபாத்தியாயராக இருந்தார்; அந்த நிலே எனக்கு ஞாபகத்துக்கு வரவில்லே. அவரைத் தாத்தாவாக முதிய நிலேயில் பார்த்த ஞாபகந்தான் இருக்கிறது. அவர் ஜீவந்தராக இருக்கும்போதே என் பாட்டியார் காலஞ் சென்றுவிட்டார். அதன் பிறகு எங்கள் பாட்டஞருக்கு வேண்டிய உபசாரங்களே என்னுடைய தாயார் செய்து வந்தார்.

முதிய பருவத்தில் தம்முடைய மனேவியை இழந்த வருத்தத்தாலும் பிள்ளேயை அடிக்கடி பிரிவதனுல் உண்டாகும் துயரிஞலும் அவருக்கு மனக்கலக்கம் இருந்தே வந்தது. தம்மை ஒருவரும் சரியாகக் கவனிக்கவில்லே என்ற எண்ணமும் இருந்தது. அவருக்கு இன்ன இன்ன வேண்டுமென்பதை என் தாயாருக்கு அறிவிக்கும் தூதனுக நான் இருந்தேன். என் பாட்டஞருக்குத் தூது செல்லும் உத்தியோகத்தினல் எனக்கு, 'கத்தரிக்காய்த் தொகையல்' என்று இளமையில் ஒரு பெயர் கிடைத்தது.

தாத்தா காலேயில் எங்கள் வீட்டுக்கு எதிர் வீட்டுத் திண்ணேயில் வெயில் காய்ந்துகொண்டு உட்கார்ந்திருப்பார். தகப்பஞர் ஊரில் இல்லாத காலம் அது. என் தாயார் என்ன சமையல் செய்வதென்று தாத்தாவைக் கேட்டு வரும்படி என்னே அனுப்புவார். அக்காலத்தில் எனக்கு ஆறு பிராயம் இருக்கும்.

நான் போய், 'இன்றைக்கு என்ன சமையல் செய்கிறது?' என்று கேட்பேன்.

அவர், ''சமையலா . , .'' என்று நீட்டுவார். அவருக்கு எல்லாம் வெறுப்பாகத் தோற்றும். ''சமையல்தானே? மண்ணுங்கட்டி, தெருப்புழுதி, சாம்பல் கொழுக்கட்டை'' என்பார். அவருக்கு இந்த உலகத்திலே உள்ள வெறுப்பின் அடையாளம் அந்த வார்த்தைகளென்று எனக்கு அப் போது தெரியாது.

குடுகுடுவென்று ஓடிப் போய்த் தாயாரிடம் தாத்தா சொன்னதை அப்படியே ஒப்பிப்பேன். ''போடா பைத்தியம்! என்ன சமையல் பண்ணுவதென்று போய்க் கேட்டு வா'' என்று மீண்டும் அன்னையார் அனுப்புவார்.

நான் மறுபடியும் போய்த் தாத்தாவைக் கேட்பேன்.

அவர் ஆர அமர யோசித்துவிட்டு, ''கத்தரிக்காய் இருக்கா?'' என்று கேட்பார். அதற்கு ஒரு தடவை ஓடிப் போய்க் கேட்டு வந்து பதில் சொல்வேன். ''பிஞ்சா இருக்கா?'' என்று அடுத்த கேள்வி போடுவார். அதற்கும் ஒரு முறை ஓடிப்போய் வருவேன்.

''அந்தக் கத்தரிக்காயைச் சுட்டுட்டு . . .'' சிறிது நிறுத்துவார்.

''தெரியறதா? அதை நன்னச் சுட்டுத் தாளிச்சுக் கொட்டி . . . .''

அவர் சொல்லும் வார்த்தைகளில் ஒவ்வொன்றுக்கும் ஹூங்காரம் செய்துகொண்டே இருப்பேன். இல்லாவிட்டால் அவர் பேச்சு மேலே போகாது.

''தாளிச்சுக் கொட்டறப்போ உளுத்தம் பருப்பைப் போட்டுடுவா; அதைப் போடச் சொல்லாதே. எண்ணெயை அதிகமா விடச் சொல்லாதே.''

அப்போது மேலெழும் கோபத்தால் சிறிது நேரம் மௌனம் ஏற்படும். மறுபடியும் ஆரம்பிப்பார்.

''அதை அம்மியிலே வச்சு நன்ன ஒட்டி ஒட்டி ஒட்டி ஒட்டி அரைக்கணும்.''

அந்த 'ஒட்டி' என்னும் சொல்லை அவர் பல முறை சொல்லுவார். அப்படிச் சொல்லும்போது அவர் கைகளின் அபிநயத்தைப் பார்த்தால் உண்மையாகவே கத்தரிக்காய்த் துவையலை அரைப்பவர்கள் கூட அவ்வளவு சிரத்தை கொள்ள மாட்டார்களென்று தோற்றும்.

தாத்தாவின் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டு கொஞ்ச தூரம் போவேன். அதற்குள் மறுபடியும் அவர், ''டே, இங்கே வாடா'' என்று கூப்பிடுவார். ''நான் சொல்றது தெரியறதா? நன்னு ஒட்டி ஒட்டி அரைக்கச் சொல்லு. உளுத்தம் பருப்பை அதிலே போடவேண்டாம்'' என்று மறுபடியும் எச்சரிக்கை செய்வார். நான் கேட்டுக்கொண்டு அப்படியே என் தாயாரிடம் சொல்லி விடுவேன்.

இப்படி என் பாட்டனருக்குப் பிரியமான 'கத்தரிக் காய்த் துவையலின் பக்குவத்தைப் பற்றியும் வேறு விஷ யங்களைப்பற்றியும் அவர் சொல்லும் சமாசாரங்களை என் தாயாரிடம் சொல்லும் வேலை எனக்கு அடிக்கடி நேரும். இந்தச் சம்பாஷணையைக் கேட்டிருக்கும் அயலார்கள் எனக்கு அந்தப் பெயரை வைத்துவிட்டார்கள்.

என் பாட்டனர் மரணவஸ்தையில் இருந்தபோது வீட் டில் உள்ளவர்களை ஒவ்வொருவராக அழைத்து அவரவர் களுக்கு ஏற்ற வண்ணம் புத்தி சொல்லிக்கொண்டு வந்தார். என் தாயாரை அழைத்து, ''நீ எனக்கு எவ்வளவோ உப சாரம் செய்திருக்கிறாய். நான் உன்னைப் பல சமயங்களில் கடிந்து பேசியிருக்கிறேன். வருத்தப்படாதே. நீ நல்ல பெண்'' என்று சொல்லிவிட்டுத் தம் தலைமாட்டிலுள்ள சிறு மூட்டையை எடுத்தார். அதில் ஒரு முடிச்சை மெல்ல அவிழ்த்தார். ''இவைகளை நான் நெடுநாளாக வைத்திருக் கிறேன். எனக்கு மிகவும் உபயோகமாக இருந்தன. இந்தா, என்னுடைய ஞாபகமாக இவைகளை வைத்துக் கொள். உனக்கு வேறு என்ன தரப் போகிறேன்! நீ க்ஷேமமா

யிருப்பாய்'' என்று இரண்டு பழைய ஊசிகளை எடுத்துக் கொடுத்தார். என் தாயார் அவற்றைப் பக்தியோடு வாங்கிக் கொண்டார். என் பாட்டனார் அடிக்கடி தம்முடைய வஸ்திரத்தை அந்த ஊசிகளைக் கொண்டு தைத்துக் கொள்வார். என் தாயார் அவற்றைப் பல வருஷங்கள் வரையில் பாதுகாத்து வந்ததுண்டு.

எங்கள் பந்துக்களில் தமிழ் வித்துவான்களும் சிலர் உண்டு. முன்னே கூறிய என் பாட்டனாரின் மாமனாராகிய ஓதனவனேசுவரையரென்பவர் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்தவர். சங்கீதத்திலும் அவருக்கு நல்ல பழக்கம் இருந்தது. அவர் தமிழில் பிரசங்கம் செய்யும் திறமையுடையவர். அடிக்கடி புதுச்சேரி முதலிய வெளியூர்களுக்குச் சென்று திருவிளையாடல், கம்பராமாயணம், பாரதம் முதலிய நூல்களைத் தொடர்ந்து சில நாட்கள் பிரசங்கம் செய்துவிட்டு ஊரார் அளிக்கும் சம்மானங்களைப் பெற்று வருவார்.

## 3. கனம் கிருஷ்ணையர்

சென்ற நூற்றாண்டில் தமிழ்நாட்டில் இருந்து புகழ் பெற்ற சங்கித வித்துவான்களுள் கனம் கிருஷ்ணையர் ஒருவர். என்னுடைய பாட்டியாருக்கு இவர் அம்மான். இவருடைய இயற் பெயர் கிருஷ்ணையரென்பது. சங்கீத மார்க்கங்களாகிய கனம், நயம், தேசிகம் என்னும் மூன்றனுள் ஒன்றாகிய கனமார்க்கத்தை மிக்க ஊக்கத்துடன் அப்பியாசம் செய்து அதில் சிறந்த திறமையைப் பெற்றார்.

இவர் உடையார்பாளையம் தாலூகாவில் உள்ளதாகிய திருக்குன்றம் என்ற ஊரிலே பிறந்தவர். இவர் இளமையில் தம் தந்தையாராகிய இராமசாமி ஐயரிடத்தும் அப்பால் தஞ்சாவூர் ஸம்ஸ்தான சங்கீத வித்துவானாக இருந்த பச்சைமிரியன் ஆதியப்பையரிடத்தும் சங்கீத சிக்ஷை பெற்றார்.

பிறகு சில காலம் தஞ்சாவூர் ஸம்ஸ்தானத்துச் சங்கீத வித்துவான்களுள் ஒருவராக இருந்தார்.

அக்காலத்தில் பொப்பிலி ஸம்ஸ்தானத்தைச் சேர்ந்த கேசவையா என்னும் பிரபல சங்கீத வித்துவான் ஒருவர் தஞ்சைக்கு வந்தார். அவர் கனமார்க்கத்தில் மிகச்சிறந்த வன்மை பெற்றவர். தஞ்சை அரசருடைய சபையில் அவர் பாடினர். கன மார்க்கத்தின் தன்மையை அரசரும் பிறரும் அறிந்து பாராட்டினர். தமிழ்நாட்டில் அக் காலத்தில் கனமார்க்கம் வழக்கத்தில் இல்லை. அதனல், 'இந்த வித்துவானுடைய உதவியால் யாரேனும் கன மார்க்கத்தை அப்பியாசம் செய்துகொண்டால் எவ்வளவு நன்ருக இருக்கும்! நமது ஸம்ஸ்தானத்திற்கும் கௌரவ மாக இருக்குமே!' என்று அரசர் எண்ணினர். ஸம்ஸ்தான வித்துவான்கள் கூடியிருந்த சபையில் அவ்விருப்பத்தை அவர் வெளியிட்டபோது ஒருவரேனும் அங்ஙனம் செய்ய முன் வரவில்லை. கன மார்க்க சங்கீதத்திற்கு நல்ல தேக பலமும் இடைவிடாத முயற்சியும் வேண்டும். அதனல் வித்துவான்கள் அதனைப் புதிதாகப் பயில்வதற்கு முன் வரவில்லை.

அப்போது இளைஞராக இருந்த கிருஷ்ணையர் தாம் அப்பியாசம் செய்வதாகத் தைரியத்துடன் கூறினர். பொப்பிலி கேசவையாவிடம் அந்த மார்க்கத்தின் இயல்பு களையும் அதனைச் சார்ந்த சக்கரதானத்தைப் பாடும் முறை யையும் தெரிந்துகொண்டு, கபிஸ்தலமென்னும் ஊருக்குச் சென்று இராமபத்திர மூப்பனரென்னும் செல்வருடைய ஆதரவில் அப்பியாசம் செய்யத் தொடங்கினர்.

அந்த அப்பியாசம் வரவர முதிர்ச்சி அடைந்தது. கடைசியில் தஞ்சை அரசர் முன்னிலையில் பொப்பிலி கேசவையாவே வியந்து பாராட்டும்படி பாடிக் காட்டினர். அதுமுதல் இவர் கனம் கிருஷ்ணையரென்றே வழங்கப் பெற்றார்.

இவர் சில காலம் திருவிடைமருதூரில் மகாராஷ்டிர மன்னர் வமிசத்தைச் சேர்ந்த அமர சிம்மரது சமுக வித்துவானாக இருந்தார். நந்தன் சரித்திரக் கீர்த்தனையின் ஆசிரியராகிய ஸ்ரீ கோபாலகிருஷ்ண பாரதியார் அங்கே வந்து அரண்மனை வித்துவானாகிய ராமதாசரென்னும் பெரியாரிடத்தில் சங்கீத அப்பியாசம் செய்து வந்தார். இடையிடையே கனம் கிருஷ்ணையருடன் பழகி இவரிடமும் சில கீர்த்தனங்களைக் கற்றுக்கொண்டார். பிறகு கனம் கிருஷ்ணையர் உடையார்பாளையம் ஸம்ஸ்தானாதிபதியாக அப்போதிருந்த கச்சி ரங்கப்ப உடையாரால் அழைக்கப் பெற்றுத் தம் வாழ்வு முழுவதும் அந்த ஸம்ஸ்தானத்து வித்துவானாகவே விளங்கி வந்தார்.

இவருடைய பெருமையினால் சிலருடைய பொறாமைத் தீ மூண்டு எரியத் தொடங்கியது. யாரோ சிலர் ஜமீன்தாரிடம் இவரைப்பற்றிக் குறை கூறி அவரது மனம் சிறிது சலிக்கும்படி செய்துவிட்டார். அந்த ஜமீன்தார் கச்சி ரங்கப்பருடைய குமாரராகிய கச்சிக் கல்யாணரங்க உடையாரென்பவர்.

ஒரு நாள் கனம் கிருஷ்ணையர் வழக்கம்போல் ஜமீன்தாரைப் பார்க்கப் போனபோது அவர் முகம் கொடுத்துப் பேசவில்லை. ஏதோ வேலையாக இருப்பவரைப் போல் இருந்தார். அறிவாளியாகிய இந்தச் சங்கீதவித்துவானுக்கு, ‘இது யாரோ செய்த விஷமத்தின் விளைவு’ என்று தெரிந்துவிட்டது. இவர் மனம் வருந்தியது. ஆனாலும் அதைத் தாம் தெரிந்து கொண்டதாக அறிவித்து விடவேண்டுமென்று விரும்பினார்.

தம்முடைய மனவருத்தத்தை வெளிப்படையாகத் தெரிவிப்பது இவருக்கு உசிதமாகப் படவில்லை. குறிப்பாகத் தெரிவிக்க எண்ணினார். சங்கீதமும் சாகித்தியமும் இவருக்கு எந்தச் சமயத்திலும் ஏவல் புரியக் காத்திருந்தன.

ஒரு நாயகி பாடுவதாகப் புதிய கீர்த்தனம் ஒன்றைப் பாட ஆரம்பித்தார்:

''பத்துப்பை முத்துப்பை வஜ்ரப் பதக்கமும்
பைபையாப் பணத்தைக் கொடுத்தவர் போலப்
பாடின பாட்டுக்கும் ஆட்டுக்கும் நீரென்னைப்
பசப்பின தேபோதும் பலனறி வேன்காணும்''

என்று சுருட்டி ராகத்தில் ஒரு பல்லவியை எடுத்தார்.

ஜமீன்தார் திடுக்கிட்டுப் போனார். இந்தச் சுருட்டி ராகம் அவர் உள்ளத்தைச் சுருட்டிப் பிடித்தது. கனம் கிருஷ்ணையர் நினைத்திருந்தால் பெரிய ஸம்ஸ்தானங்களில் இருந்து ராஜபோகத்தில் வாழலாமென்பதை அவர் அறிந்தவர். தம்முடைய சம்மானத்தை எதிர் பாராமல் அன்பை மாத்திரம் விரும்பி உடையார்பாளையத்தில் இருப்பதும் ஜமீன்தாருக்கு நன்றாகத் தெரியும். இந்த எண்ணங்கள் பொறாமைக்காரருடைய போதனைகளை மறையச் செய்தன. கிருஷ்ணையருடைய பல்லவி அந்த ஜமீன்தாருடைய காதில் விழுந்ததோ இல்லையோ உடனே அவரது பழைய இயல்பு மேலெழுந்து நின்றது. 'என்ன பைத்தியக்காரத்தனம் பண்ணி விட்டோம்! நாம் இவருக்கு முத்துப் பையா தந்திருக்கிறோம்? வஜ்ரப் பதக்கமா கொடுத்தோம்? இவரால் நமக்கு எவ்வளவு பெருமை! நடுக் காட்டிலுள்ள இந்த ஊருக்கு வேறு ஸம்ஸ்தானத்திலிருந்து வித்துவான்களெல்லாம் வந்து போவது யாராலே? இவராலே அல்லவா? இதை நாம் மறந்து விட்டோமே!' என்று நினைந்து இரங்கினார்.

''ஸ்வாமீ! க்ஷமிக்க வேண்டும். நான் தெரியாமல் பராமுகமாக இருந்து விட்டேன்'' என்று ஜமீன்தார் வேண்டிக் கொண்டார்.

நினைத்த காரியத்தைச் சாதித்துக் கொண்ட கிருஷ்ணையர் பழைய பல்லவியை ஜமீன்தாரைப் புகழும் முறையில் மாற்றிப் பாடத் தொடங்கினார்:

